கழக வெளியீடு : ஏகஉ

மலர் வழிபாட்டு வரிசை - க

# பிள்ளையார் வழிபாடு

(கം௮ பேரறி)








திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

முதற் பதிப்பு: ஆகஸ்டு, 1954.
இரண்டாம் பதிப்பு: நவம்பர், 1954.

# பதிப்புரை

மலர் வழிபாடு (அருச்சனை) என்பது ஆண்டவன் திருவடியை மணமுள்ள பூவால் வழிபடுவது. நினைவும், சொல்லும், செயலும் ஒன்றுபட்டு அன்புடன் வழிபடுவது வழிபாடு. நினைவால் ஆண்டவன் திருவருளையும், அன்பால் வேண்டும் வேண்டுகோளையும், அதற்காக நம்மிடம் அமையவேண்டிய குணங்களையும் நினைதல்வேண்டும். வாயினால் திருமுறை முதலிய தமிழ் மாமறையினை ஓதுதல்வேண்டும். கையினால் பூ, வில்வம், அறுகு, துளசி முதலியவற்றுள் ஒன்றினை எடுத்துத் திருவடியில் சேர்த்தல் வேண்டும். இதுவே நிறைந்த வழிபாடு. ஓதுமந்திரம் அவரவர் தாய்மொழியிலேயே இருத்தல்வேண்டும். அதுவே மெய்ப்பயனைத்தரும். எல்லார்க்கும் நன்கு விளங்கும்.

ஆண்டவன் எல்லா மொழியிலும் இருக்கின்றான். "சொல்லானைப் பொருளானை" என்பது அப்பர் தேவாரம். "அருச்சனை பாட்டேயாகும்" என்பது சேக்கிழார் அருள்மொழி. "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்" என்பது திருவாசகம். திருக்கைலாயத்தில் சிவபெருமான் திருச்செவி சேர்த்தது சேரமான் "ஞானத்தமிழ் உலா." தமிழகத்தில் திருக்கோவிலும், சிவநெறியும், வழிபாடும் சிறந்து நிலைத்தது நால்வர் திருப்பாடல்களாலேயாம். நால்வர் 'போற்றி'த் தொடர் அமைத்துப் பாடியது அருச்சனைக்கே. நாமும் அவர் ஆணையின் படித் திருமுறைத் தீந்தமிழால் வழிபடுவோமாக.

அதற்குமாறாக அயன்மொழி மந்திரங்களால் இப்பொழுது வழிபாடு நடக்கின்றது. அது தமிழ்நாட்டிற்கு ஒவ்வாது. தமிழிலேயே செய்து எல்லாரும் கேட்டு இன்புறுமாறு வழிபாடு செய்வதற்காக இந்நூல் தொகுக்கப்பெற்றது. இதன்படியே திருக்கோவில்களிலும் வீடுகளிலும் மலர்வழிபாடு செய்யவேண்டுமென்று குருக்கள்மாரையும் வழிபடுவோரையும் வேண்டிக் கொள்கின்றோம்.

தணிகைமணி, ராவ்பகதூர் திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ., அவர்கள் இதனை அன்புடன் பார்வையிட்டுச் சேர்ப்பன சேர்த்துச் செப்பஞ்செய்த தந்தமைக்கு எங்கள் நன்றி என்றென்றும் உரியதாகுக.

நாமும் நால்வர் அடிச்சுவடுபற்றி அவர்தம் திருமுறை வழியாகவே எல்லா வழிபாடும் செய்தும் செய்வித்தும் செல்வமும் சிறப்பும் எய்தி என்றும் இன்புறுவோமாக. இதனை முன்னின்று முட்டின்றி முடிக்க வேண்டுவது ஆண் பெண் பாலாராகிய ஒவ்வொரு செந்நெறித் தமிழர்களின் கடமையும் உரிமையும் பேறுமாகும். அரசாங்கம் இதற்குத் துணைபுரிதல் வேண்டும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

உ

# பிள்ளையார் வழிபாடு

## க. நூற்றெட்டுப் போற்றி

திருச்சிற்றம்பலம்

[நிலைமண்டில ஆசிரியப்பா]



ஓம்எனும் பொருளாய் உள்ளோய் போற்றி
பூமனும்[1] பொருள்தோறும் பொலிவாய் போற்றி
அகரம் முதலென ஆனாய் போற்றி
அகர உகர ஆதி போற்றி
மகரமாய் நின்ற வானவ போற்றி
பகர்முன் னவனும் பரனே போற்றி
மண்ணாய் விண்ணாய் மலர்ந்தாய் போற்றி
கண்ணுள் மணியாய்க் கலந்தாய் போற்றி
நீர்தீக் காற்றாய் நின்றாய் போற்றி
கார்[2]குளி ராகக் கனிந்தாய் போற்றி
பகலவன் நிலவாய்ப் பரந்தாய் போற்றி
நிகர்[3]மீன் கணமாய் நிலைத்தாய் போற்றி
மழைபொழி இமய வல்லிசேய் போற்றி
தழைசெவி எண்தோள் தலைவ போற்றி
திங்கட் சடையோன் செல்வ போற்றி
எங்கட் கருளும் இறைவா போற்றி
அறுமுகச் செவ்வேட்கு அண்ணா போற்றி
சிறுகண் களிற்றுத் திருமுக போற்றி
செம்பொன் மேனிச் செம்மால் போற்றி

---

1. பூம(ன்)னும் - பூமியில் இருக்கின்ற. 2. கார் - மேகம். 3. நிகர் - ஒளி.

௨௦. உம்பர் போற்றும் உம்பல்[1] போற்றி
பண்ணியம்[2] ஏந்துகைப் பண்ணவ போற்றி
எண்ணிய எண்ணியாங் கிசைப்பாய் போற்றி
அப்பமும் அவலும் கப்புவாய் போற்றி
முப்புரி நூல்மார்பு அப்பா போற்றி
௨௫. எள்ளுருண் டைபொரி ஏற்போய் போற்றி
தெள்ளுறு தேவிட்டாத் தேனே போற்றி
மூவர் மொழி[3]யிடம் மொழிந்தாய் போற்றி
தேவர்க் கரிய தேவா போற்றி
மாலுக் கருளிய மதகரி போற்றி
௩௦. பாலெனக் கடல்நீர் பருகினாய் போற்றி
பாரதம் எழுதிய பரூஉக்கர போற்றி
மாரதம் அச்சோடி மதவலி[4] போற்றி
மாங்கனி அரன்பால் வாங்கினோய் போற்றி
ஈங்கினி எம்பால் எழுந்தருள் போற்றி
௩௫. கரும்பா யிரங்கோள் கள்வா போற்றி
அரும்பொரு ளேயெம் ஐயா! போற்றி
திணைபால்[5] கடந்த தேவே போற்றி
புணை[6]யாய் இடர்க்கடல் போக்குவோய் போற்றி
பேழை வயிற்றுப் பெம்மான் போற்றி
௪௦. ஏழைக் கிரங்கும் எம்மிறை போற்றி
அடியவர் உள்ளம் அமர்ந்தாய் போற்றி
அடிமலர் எம்தலை அணிவாய் போற்றி
திருநீற் றொளிசேர் செம்மால் போற்றி
இருவே றுருவ ஈசா போற்றி
௪௫. உள்ளத் திருளை ஒழிப்பாய் போற்றி

---

1. உம்பல் - யானை. 2. பண்ணியம் - பண்ணியாரம்; பலகாரம். 3. மூவர் மொழி - தேவாரம். 4. மதவலி - மிகுந்த வலிமையுடையவன். 5. திணை பால் - குலமும் வகுப்பும். 6. புணை - தெப்பம்.

கள்ளப் புலனைக் கரைப்பாய் போற்றி
நம்பியாண் டார்க்கருள் நல்லாய் போற்றி
எம்பிரா னாக இசைந்தாய் போற்றி
உருகுவோ ருள்ளத் தொளியே போற்றி
பெருகருள் சுரக்கும் பெருமான் போற்றி
தம்பிக்கு வள்ளியைத் தந்தாய் போற்றி
உம்பர்[1]கட் கரசே ஒருவ போற்றி
பிள்ளையார்ப் பெயர்கொண் டுள்ளாய் போற்றி
வள்ளலாய் நலங்கள் வழங்குவாய் போற்றி
மூவாச் சாவா முத்தா போற்றி
ஆவா எங்களுக் கருள்வாய் போற்றி
தமிழ்ச்சுவை சார்திருச் செவியாய் போற்றி
அமிழ்தாய் எம்மகத் தானாய் போற்றி
மழவிளங் களிறே மணியே போற்றி
குழவியாய்ச் சிவன்மடி குலவுவோய் போற்றி
பெருச்சா ளியூரும் பிரானே போற்றி
நரிச்செய லார்பால் நண்ணாய் போற்றி
செந்தா மரைத்தாள் தேவா போற்றி
நந்தா மணியே நாயக போற்றி
இருள்சேர் இருவினை எறிவாய் போற்றி
கரிமுகத் தெந்தாய் காப்போய் போற்றி
ஆங்கா ரம்முளை அறுப்பாய் போற்றி
பாங்கார் இன்பப் பராபர போற்றி
கற்றவர் விழுங்கும் கனியே போற்றி
மற்றவர் காணா மலையே போற்றி
சொல்லொடு பொருளின் தொடர்பே போற்றி
கல்லும் கரைக்க வல்லோய் போற்றி
தொந்தி வயிற்றுத் தந்தி போற்றி

---

1. உம்பர் - தேவர்.

முந்திய பொருட்கும் முந்தியோய் போற்றி
ஐந்துகை யுடைய ஐய போற்றி
ஐந்தொழில் ஆற்றும் அமர போற்றி
அருளாய் அருள்வாய் ஆண்டவ போற்றி
தருவாய் மணமலர்த் தாராய் போற்றி
கயமுக[1] அசுரனைக் காய்ந்தாய் போற்றி
மயலறும் இன்ப வாழ்வே போற்றி
ஆனையாய்ப் புழுவாய் ஆனாய் போற்றி
பானை வயிற்றுப் பரமே போற்றி
கடம்[2]பொழி யானைக் கன்றே போற்றி
மடம்ஒழி அறிவின் வளனே போற்றி
பாலொடு தேனும் பருகுவோய் போற்றி
மேலொடு கீழாய் மிளிர்வோய் போற்றி
எய்ப்பில் வைப்பாய் இருந்தோய் போற்றி
மெய்ப்பொருள் வேழ முகத்தாய் போற்றி
நல்லார்க் கெட்டும் நாதா போற்றி
பொல்லா மணி[3]யே புராதன போற்றி
அறிவின் வரம்பை அகன்றாய் போற்றி
குறிகுணங் கடந்த குன்றே போற்றி
எட்டு வான்குணத் தெந்தாய் போற்றி
கட்டறு களிற்று முகத்தோய் போற்றி
மலரில் மணமாய் வளர்ந்தாய் போற்றி
அலர்கதிர் ஒளியின் அமர்வோய் போற்றி
ஓங்கா ரம்முகத் தொருத்தல்[4] போற்றி

---

1. கயமுகம் - யானை முகம். 2. கடம் - மதநீர். 3. பொல்லா மணி; பொள்ளாமணி - துளைக்கவொண்ணாத முத்து. ஈங்கே அத்தகைய யானைமுகக் கடவுளைக் குறித்தது ஆகுபெயர். 'போதாய்ந் தணைவதென்று கொலோஎன் பொல்லாமணியைப், புணர்ந்ததே' எனத் திருவாசகத்திலும் வருதல் காண்க. 4. ஒருத்தல் - யானை.

ஏங்கா துயிர்க்கருள் இயற்கை போற்றி
எண்ணும் எழுத்துமாய் இசைந்தாய் போற்றி
பண்ணும் பயனுமாய்ப் பரந்தாய் போற்றி
அருவே உருவே அருவுரு போற்றி
பொருளே பொருளின் புணர்ப்பே போற்றி
புகர்முகக் களிற்றுப் புண்ணிய போற்றி
அகலிடம் நிறைய அமர்ந்தோய் போற்றி
செல்வம் அருள்க தேவா போற்றி
நல்லன எமக்கருள் நாயக போற்றி
ஆக்கமும் ஊக்கமும் அருள்வாய் போற்றி
காக்கஎங் களையுன் கழலிணை போற்றியே.

திருச்சிற்றம்பலம்

---

# ௨. புகழ்ப் பாக்கள்

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே. (க)

—தேவாரம்.

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே. (உ)

—திருமந்திரம்.

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை. (௩)

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கைதணி விப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து. (ச)

வாழைக் கனிபலவின்கனி மாங்கனி தாம்சிறந்த
கூழைச் சுருள்குழை அப்பம்எள் ளுண்டை எல் லாம்துறுத்
பேழைப் பெருவயிற் றோடும் புகுந்தென் உளம்பிரியான் [தும்
வேழத் திருமுகத் துச்செக்கர் மேனி விநாயகனே. (ரு)

—மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை.

மொழியின் மறைமுதலே முந்நயனத் தேறே
கழியவரு பொருளே கண்ணே—தெழிய
கலாலயனே எங்கள் கணபதியே நின்னை
அலாதையனே சூழாதென் அன்பு. (சு)

சுடர்ப்[illegible]ம்பு தழைத்த அழல்தனி நெடுவேல்
சேய்[illegible] வரும் [illegible] ஏய
கொன்[illegible] படலத் து[illegible]சனைக் கனிந்த
ஓங்கிருந்[illegible] வைவளிய் மருங்கனி
அள்ளல் [illegible]சுவை அருந்திய
வள்ளற் கிங்கெ[illegible] மனங்கனிந் திடுமே. (எ)

—மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை.



எடுக்கு மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம். (அ)

—பெரியபுராணம்.

பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே—மாசற்ற
காரார் வரைஈன்ற கன்னிப் பிடிஅளித்த
ஓரானை வந்தென் உளத்து. (கூ)

—குமரகுருபர அடிகள்.

உள்ளமெனுங் கூடத்தில் ஊக்கமெனுந்
தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய அன்பென்னுந் தொடர்பூட்டி
இடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம். (கо)

—திருவிளையாடற் புராணம்.

நடையூறு சொன்மடந்தை நல்குவது நம்மேல்
இடையூறு நீங்குவது மெல்லாம்—புடையூறு
சேனைமுகத் தாளிரியச் சிறுமுகத் தாறுமதத்
தானைமுகத் தானை நினைத் தால். (கக)

—புறப்பொருள் வெண்பாமாலை .

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
நால்வாயைங் கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறைஇதழித் தாழ்சடையான்
தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே
இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமும்ஒன்
றேயென்னச் செய்யும் தேவே. (கஉ)

—சிவஞானசித்தியார்.

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு. (கங)

—மூதுரை.

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா. (கச)

—நல்வழி.

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலவிசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பா ரக்கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
அற்புதம் நின்ற கற்பகக் களிறே. (கரு)

—விநாயகர் அகவல்.

மறைநெறி ஒழுகுநர் தங்களை ஆள மதித்த மறைப்பொருளே
வளிவெளி சலநிலம் அங்கியெ லாமுரு வத்து நிறுத்தவனே
நிறைவளை மகளிர் நலம்படர் வோர்தம் நினைப்பில் ஒளித்தவனே
நிருமல அறிவினர் சிந்தை நிலாவிய நிர்க்குண அற்புதனே
அறைகடல் உலகொடு பங்கயன் மாலை அளித்து வளர்த்தவனே
அவரவர் பெறவுறு பந்தமும் விடும் அமைத்த அறக்கடலே
முறைவளர் கலசைகொள் செங்கழு நீரிறை முத்த மளித்தருளே
முனிவர்கள் அமரர்கள் வந்தடி தாழ்பவ முத்த மளித்தருளே.

உருகும் அடியார் அள்ளூற உள்ளே ஊறும் தேன்வருக
உண்ணத் தெவிட்டாச் சிவானந்த ஒளியே வருக புலன்வழி
[போய்த்
திருகும் உளத்தார் நினைவினுக்கும் சேயாய்வருக எமை ஆண்ட
செல்வா வருக உமைஈன்ற சிறுவா வருக இணைவிழியால்
பருகும் அமுதேவருகஉயிர்ப் பைங்கூழ் தழைக்கக்கருணைமழை
பரப்பு முகிலே வருகநறும் பாகே வருக வரைகிழித்த
முருக வேட்கு முன்உதித்த முதல்வா வருக வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர் முனியே வருக வருகவே. (கஎ)
—செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்.

அஞ்சுமுகத் தான்மகன்மால் அஞ்சுமுகத் தானருள்வான்
அஞ்சுமுகத் தானஞ் சனிகரத்தான்—அஞ்சுமுக
வஞ்சரையான் காணு வகைவதைத்தான் ஓரரையோடு
அஞ்சரையான் கண்கள் அவை. (கஅ)

மருளுறு மனமும் கொடியவெங் குணமும்
மதித்தறி யாததுன் மதியும்
இருளுறு நிலையும் நீங்கிநின் அடியை
எந்தநாள் அடைகுவன் எளியேன்
அருளுறும் ஒளியாய் அவ்வெளிக் குள்ளே
அமர்ந்தசிற் பரவொளி நிறைவே
வெருளுறு சமயத் தறியொணுச் சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (கக)
—சித்திவிநாயகர் பதிகம்.

தஞ்சம் என்றுனேச் சார்ந்தனன் எந்தைநீ
தானும் இந்தச் செகத்தவர் போலவே
வஞ்சம் எண்ணி இருந்திடில் என்செய்வேன்
வஞ்சம் அற்ற மனத்துறை அண்ணலே
பஞ்ச பாதகம் தீர்த்தனே என்று நின்
பாத பங்கயம் பற்றினன் பாவியேன்
விஞ்ச நல்லருள் வேண்டித் தருதியோ
விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. (உ0)

—கணேசத் திருவருள் மாலே.

அகரமென அறிவாகி யுலக மெங்கும்
அமர்ந்தகர வுகரமக ரங்கள் தம்மாற்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில்பொருள் நான்கினேயும் இடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணே புரிந்தல் லார்க்கு
நிகரில்மறக் கருணேபுரிந் தாண்டு கொள்ளும்
திருமலனேக் கணபதியை நினேந்து வாழ்வாம். (உக)

கருணேமதம் பொழிமுகத்துக் கணேசரவர் தமக்கறிவுந்
தொழிலு மான
அருளெனுமுன் மையையெவரும் மறியவவ ருமையினவ
தரித்த ஞான்றும்
ஒருமுனியோம் பியதமிழின் அவதரித்த ஞான்றுமுடன்
ஆகித் தோன்றித்
திருவுளத்தின் வழிநிற்கும் சித்திபுத்தி எனுமிவர்தாள்
சென்னி சேர்ப்பாம். (உஉ)

—விநாயக புராணம்.

நிகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம். (உங)

மண்ணுலக கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலாம் எளிதின் முற்றுறக்
கண்ணுதல் உடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.　　(உச)
—கந்தபுராணம்.

வானுலகும் மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம்.　　(உரு)
—சேக்கிழார் நாயனார் புராணம்.

வஞ்சகத்தில் ஒன்றானைத் துதிக்கைமிகத் திரண்டானை
வணங்கார் உள்ளே
அஞ்சரண மூன்றானை மறைசொலுநால் வாயானை
அத்தன் ஆகித்
துஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணி யாறானைத்
துகளை மானைச்
செஞ்சொல்மறைக் கெட்டானைப் பரங்கிரிவாழ் கற்பகத்தைச்
சிந்தை செய்வாம்.　　(உசு)
—திருப்பரங்கிரிப் புராணம்.

பிஞ்சுமதிச் சடாமகுடப் பெருமானைப் பிரியாத
வஞ்சிஇம வான்தவத்தின் வருபேடை மயிலுதவும்
அஞ்சிறைவண் டிரைத்துவிழும் அருவிமதம் ஒழுகுகவுள்
குஞ்சரவெம் புகர்முகத்துக் குரிசிலடி இணைதொழுவாம்.
—பிரமோத்தரகாண்டம்.

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.　　(உஅ)
—விருத்தாசல புராணம்.

அருளெனும் கடல்முகந் தடியர் சிந்தையாம்
பொருள்பெறு நிலஞ்சிவ போக முற்றிட
வரமழை உதவுசெவ் வந்தி யானையின்
திருவடி இணைமலர் சென்னி சேர்த்துவாம்.　　(உகு)
—செவ்வந்திப் புராணம்.

ஊற்றெ டுத்துவன் டோவிடு மும்மதத்து
ஆற்ளு ழுக்கின் அருவியஞ் சாரல்வாய்
ஏற்று கைக்கும் இறைவற்கும் முந்திய
மாற்றி லாக்களி யானையை வாழ்த்துவாம். (கூ0)

—திருச்செந்தூர்ப் புராணம்.

புயல்காட்டும் பனிவரையின் பிடிதழுவும் சிவவேழம்
பொருப்பில் வானில்
இயல்காட்டும் இருபிடிசேர் முந்நாலு துதிக்கையன்முன்
ஈன்ற ஞானச்
செயல்காட்டும் ஒருகோட்டின் இருகோட்டு வெண்பிறைவாழ்
செக்கர் வானை
மயல்காட்டும் திருமேனி மழைமதச்சண் பகக்களிற்றை
மனத்துள் வைப்பாம். (கூக)

—திருக்குற்ருலப் புராணம்.

சீர்பூத்த இதழிபுனை சிற்பரனுர் அற்புதனுர்
சிவையோர் பாகர்
நீர்பூத்த திருவுளத்தில் நினைத்தபடி வேதமுனி
நிகழ்த்த லோடும்
ஏர்பூத்த ஒருகோட்டால் இலகுபா ரதமேரு
இடத்தே தீட்டும்
போர்பூத்த நெடுந்தடக்கைப் பொல்லாத பிள்ளைபதம்
போற்றல் செய்வாம். (கூஉ)

—திருநெல்வேலிப் புராணம்.

ஓங்குமொரு மருப்பானை உயிர்க்குயிராய் இருப்பானை
உரக வேந்தன்
தாங்குநெடு நிலத்தானை முகத்தானை வதைத்தானைச்
சயில மானைப்
பாங்குவைத்து மழுத்தானை பரித்தான்தந் தளித்தானைப்
பசும்பொன் தோட்டுப்
பூங்கமல பதத்தானைப் பொருவில்ஐந்து கரத்தானைப்
போற்றல் செய்வாம். (கூகூ)

—சிவராத்திரிப் புராணம்.

பண்ணியம் ஏந்தும் கரந்தனக் காக்கிப்
பால்நிலா மருப்பமர் திருக்கை
விண்ணவர்க் காக்கி அரதனக் கலச
வியன்கரம் தந்தைதாய்க் காக்கிக்
கண்ணில்ஆ ணவவெங் கரிபிணித் தடக்கிக்
கரிசினேற் கிருகையும் ஆக்கும்
அண்ணலைத் தணிகை வரைவளர் ஆபச்
சகாயனை அகந்தழீஇக் களிப்பாம். (கச)

—தணிகைப் புராணம்

விகட சக்கர வாரணம் தொடர்வரும் வித்தக முகில்விற
விகட சக்கர விந்தமன் னவன்தனக் கருளுமெய்த் தலைவாகு
விகட சக்கர ஆகமென் முலையுமை கான்முளை என்னுச்சே
விகட சக்கரர் எந்திரம் எனச்சுழல் வெம்பவக் கடல்நெஞ்சே.

—காஞ்சிப் புராணம்.

'சுரகு லாதிபன் தூய்மலர் நந்தனம்
பெருக வார்கடற் பெய்த வயிற்றினேன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரணம் நாளும் தலைக்கணி ஆக்குவாம். (கரு)

—பிரபுலிங்க லீலை.

நீடாழி உலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபா ரதஞ்சொன்னநாள்
ஏடாக மாமேரு வெற்பாக வங்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ. (கஎ)

முருகார் மலர்த்தாம முடியானை அடியார் முயற்சித்திறம்
திருகாமல் விளைவிக்கும் மதயானை வதனச் செழுங்குன்றினைப்
புருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரும்
ஒருகோடி பூதேவருங்கை தொழுங்கோவை உறஉன்னுவாம்.

—வில்லிபாரதம்.

முக்கண் ஒருத்தன்மற் றென்னுள வாரி முயங்குதலான்
மிக்கவெண் கோடொன்று மேசிதை யாநிற்கும் வெள்ளறிவை
உக்க கருமத மேகரு மாசை ஒழிக்கும்அருள்
புக்கசெம் மேனி மனஞ்செம்மை யாகப் புணர்த்திடுமே. (கக)

—வாட்போக்கிக் கலம்பகம்.

கைத்தலம் நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ
கற்பகம் எனவினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புனம் அதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கணம் மணமருள் பெருமாளே.
—திருப்புகழ்.

தழைவிரி கடுக்கைமாலைத் தனிமுதல் சடையிற் சூடும்
குழவிவெண் திங்கள் இற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற இணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம். (சக)
—நைடதம்.

ஆணி லேஅன்றி ஆருயிர்ப் பெண்ணிலே
அலியி லேயிவ் வடியனைப் போலவே
காணி லேனொரு பாவியை இப்பெருங்
கள்ள நெஞ்சக் கடையனை ஆளையா
ஏணி லேஇடர் எய்த விடுத்தியேல்
என்செய் கேனினி இவ்வுல கத்திலே
வீணி லேயுழைப் பேனருள் ஐயனே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. (சஉ)
—திருவருட்பா.

---

அப்பர் அச்சகம், 2/140, பிராட்வே, சென்னை-1—2. E. 10200.

...ளர்ச்சிக்கான

# கழக வெளியீடுகள்

## ...ளர் வழிபாட்டு வரிசை

| | | |
|---|---|---|
| பிள்ளையார் வழிபாடு | அ௵ | 1 |
| முருகப்பெருமான் வழிபாடு | ,, | 1 |
| சிவபெருமான் வழிபாடு | ,, | 1 |
| உமையம்மை வழிபாடு | ,, | 1 |
| அம்பலவாணர் வழிபாடு | ,, | 1 |
| திருமால் வழிபாடு | ,, | 1 |

## சமயவளர்ச்சி நூல்கள்

| | | |
|---|---|---|
| திருநீறும் சிவமணியும் | ,, | 1 |
| திருவைந்தெழுத்து | ,, | 1 |
| சிவதீக்கை | ,, | 1 |
| திருவிளக்கு வழிபாடு | ,, | 1 |
| திருக்கோவில் வழிபாடு | ,, | 1 |
| வழிபாட்டுக்குரிய தேவாரத்திரட்டு | ,, | 1 |
| வழிபாட்டுக்குரிய பிரபந்தத்திரட்டு | ,, | 1 |
| பள்ளிக்கூட வழிபாடு | ,, | 2 |

## வேண்டுகோள் பதிகங்கள்

(துன்பம் நீக்குவன)

| | | |
|---|---|---|
| 1, 2, 3, 4, 5 புத்தகங்கள் தனித்தனி விலை | ,, | 1 |

## பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| பூப்பிள்ளை அட்டவணை | ,, | 3 |
| திருவாசகத் திருவகவல் | ,, | 1½ |
| கழகச் சைவ வினாவிடை (முதற் புத்தகம்) | ,, | 3 |
| சைவசமய நோன்பு விளக்கம் | ,, | 6 |

இதன் விலை அ௵ 1.

அப்பர் அச்சகம், சென்னை-1—C. 10200.